ல் அறிவின்றிச்சடமாய்க்கிடப்பதனாலும் (உணரும்புல ன்களொழிவால் (ஞானேந்திரியங்களை நீங்கி யிருப்பதனாலும் (பிராணனுமன்று) பிராணவாயுவும் ஆத்மாவல்ல அன்று (அந்தப்பிராணவாயு நனவாதி துரியாந்தம் இயங்குவானேனென்னில் சேனைசூழ் நகர்வலஞ் செய்பொழுது மன்னனையொழியாது) அரசன்நகர் வலம் வரும்போழ்து அவனை நீங்காமல்சேனைகள் சூழ்ந்து வருதல்போல் கருவிகரணாதிகள் சூழ்ந்து நிற்கஜாக்ர ஸ்வப்நசுழுத்திகளில் ஆத்மாசஞ்சரிக்கிற காலத்தில் இந்த ஆத்மாவை அந்தவாய்வு நீங்காமல் துரியம்வரைக்கும்இருக்கும்-எ-று.

அ-கை. சுழுத்தியில் பிராணவாயு இயங்குதற்குக் காரணம் அருளிச்செய்கின்றார்,

௩௪. கரணமொடுங்கவாயுநிகழ்தவன்கொலென்னி

லுடல்காவலாகு மிலைதேல்

மரணமடைந்ததென்று தமர்சுட்டிடார்முன்

வளைவாயின் ஞானிகொளுமே.

௪-து. கருவிகளொடுங்கக் காலியங்க விடில்

எரியிடுவாரென் றியங்கிய தென்றது.

இ-ள். (கரணமொடுங்க வாயுநிகழ்வென்கொலென்னில்) கருவிகரணங்களெல்லாம் அடங்கிநிற்கப்பட்ட சுழுத்தியில் பிராணவாயுமாத்திரம் உசுவாஸ நிசுவாசமாய் நடந்துகொண்டிருக்கின்றது என்னெனில் (உடல்காவலாகும்) சுழுத்தியில் தேகத்திற்குக்காவலாகவிருக்கும் (இலதேல்) அப்படி உசுவாசநிசுவாசமாகக் காத்துக்கொள்ளாமல் நீங்கியிருக்குமானால் (மரணமடைந்ததென்று தமர்சுட்டிடாமுன்) இறந்துபோய்விட்டதென்று உரியசுற்றத்தார் தகனம்பண்ணுவதற்குமுன்னமே (வளைவாயி

ன்றாளிகொளுமே) விளைந்த வாவினையுடையநாய்கள் ஆகாரமாகக்கொள்ளுமென்று உடலைக்காத்திருக்கின்றது-என-று. ௫௨

அ-கை. மெய்பிராணவாயு நீயன்றென் றுரைத்தருள ஆந்தக் கரணமோ நானென்ற மாணக்கனை நோக்கி அந்தக்கரணமும் நீயன்றென்றருளிச் செய்கிறார்.

கவி. இனமுறவென்ன வுள்ளகரணத்தி லொன்றி
தெனலாவி தென்னுதெனதால்
மனமுன மன்னமென்றவதனாலுமல்ல
மதியல்ல வந்தவகையே.

க-று. கனமிக்குமந்தக்கரணத்திலாகும்
மனம்புத்தியன்று நீயென் றறிவித்தது.

இ-ள். (மனம்) மனமானது (இனமுற மென்னவுள் கரணத்தி லொன்றிதெனலால்) தத்துவங்களுக்கினமாகிய உறவென்று சொல்லவிருக்கின்ற அந்தக்கரணத்தி லொன்றாகிய இந்த மனமென்பதனாலேயும் (இனதென்னுதெனலால்) இந்த தேகாதிபிரவஞ்சத்தை என்னுதென்பதனாலேயும் (முனமனமென்றவதனாலும்) முன்பே அன்னத்தின் பாகமென்று சென்னதினாலும் (அல்ல) நீயல்லவாகில் புத்திதானென்று சொல்லுவாயாகில் (மதியல்ல அந்தவகையே அதுபோலவே புத்திநீயல்ல-என-று.

கவி. இடரின்புளதா நிலையற்றறிவற்
றெண்ணுங்காணங் களிலாயெவரும்
அடரும்பிறவிக் கடியென்றவரு
மகங்காரமுநீயல வென்றறியேன்.

க-று. அகங்காரமுதான வறிவிலாத் துற்குண
அகங்காரமு நீயன்றென் றறைந்தது.

இ-ள். (அகங்காரமுநீயல) அகங்காரமுநீயன்று என்னதென்றால் (இடரின்புளதாய்) துன்பத்தையேயின்பமாகவுடையதாய் (நிலையற்று) நிலைபெற்ற குணமிலாததாய் (அறிவற்று) அறிவிலாததாய் (எண்ணுங்கரணங்களிலாய் எவரும்) யாவரும் (அடருமபிறவிக்கடியென்றுவருமென்றறியே) நெருங்கவந்து சனிக்குஞ்சனனத்திற்கு ஆதிகாரணமென்றுவருகின்றதென்றறிவாய்-எ-று. (௫௪)

கலி. ஐயப்படலோர் பொருணிச்சயமாய்
அறியப்படல் யானெனதென்றுமதம்
செய்யப்படல் செய்வது சிந்தனையாம்
சித்தம்மதுவன்றெனை நீதெளியே.

க-து. மித்தையை யானெனதென்ற விகாரமாம்
சித்தமுமன்றெனத் தெளியவுரைத்தது.

இ-ள். (ஓர்பொருணிச்சயமாயறியப்படலையப்படல்) ஒருபதார்த்தத்தை மெய்யெனவறிதலும் அதில்சந்தேகப்படுதலும் (யானெனதென்று மதஞ்செய்யப்படல்) யானென்றும் எனதென்றும் எவற்றிலுஞ் செருக்கையுண்டாக்குதலும் (செய்வது சிந்தனையாம்) இவைகளைச்செய்விக்குஞ் சிந்தனையாகிய சித்தம்மதுவன்றெனை நீதெளியே) சித்தமானது நீயல்லவென்று அறிவாய்-எ-று. (௫௫)

அ-கை. பஞ்சபூதவிகாரமாகிய தேகமுதல் சித்தபரியந்தமும் நீயல்லவென்றவர் நின்னதன்றென்பதையுமேலருளிச்செய்கின்றார்.

கலி. முன்னுகவுடம்பது சித்தமதேமுடிவாக
மொழிந்த பொருட்டிரடான்

நின்றாகிலனீ யறியும்பொருளாய்
நிகழ்கின்றதனா லெனநின்மலனே.

க-ஞ. தனுகாதி சகலமுமோர்ந்து
நினைவரலறிவது நினதலவென்றது.

இ-ள். (உடம்பதுமுன்னாக சித்தமதேமுடிவாக) உடலினைக் குறித்துச் சொன்னனனதாடைபொன்றுவென்ற செய்யுள்முதலாக சித்தத்தைக்குறித்து முடிவிலேசொன்னனஐயப்படலென்ற செய்யுளீறாகபதினாறு செய்யுளினாலேயும் (மொழிந்தபொருட்டிடான்) சொல்லிக்கொண்டுவந்த அர்த்த சமுகங்களெல்லாம (நீயறியும் பொருளாய்நிகழ்கின்றதனால்) உன்னாலேயறியப்பட்டபதார்த்தமாய் விளங்குகையினாலே (நின்றாகிலவெனநின்மலன்) அறிவுமயமாய் விளங்குகின்ற ஆத்மாவாகிய வுன்னதல்லவென்றார் மலரகிதரானநந்திபாராயணமுனிவர்-எ-று. ருஞ

ஆ-கை. தனுகரணாதிக ணீயுமன்று நின்னதுமன்றென்ற ஆசாரியரை நோக்கி மாணாக்கன் விண்ணப்பஞ்செய்வதை மேலருளிச்செய்கின்றார்.

சவி. உன்னாலறியப்படும்யாவையுமுன்
னுயிரன்றெனவோ வினையொக்குமெனக்
கென்னாலறியா தொழியும்பொருளோ
யானாகுவதென்றன னென்றலுமே.

க-ஞ. நீயறியும்பொரு ணீயலவென்றனை
நாயேகொத்தது நானென்றது.

இ-ள். (உன்னாலறியப்படும் யாவையும் முன்னுயிரன்றெனவோ வினை) உன்னாலே பகுத்தறியப்பட்டவையாவும் உன்னுயிரல்லவென்று தேவரீர்திருவாய்மலர்ந்தருளினீர் (எனக்கொக்கும்) அவை அடியேனுக்குச் சமாதானமாக

விருக்கின்றது ஆனால் என்னாலறிய தொழியும்பொருளோ யறைகுவதென்றனன் என்னாலே யரிதற்கரிதாகியபொருளோ (நானாகின்றதென்றனன் என்றலுமே) இப்படிசொல்லவே மாணாக்கனைநோக்கிமேலருளிச்செய்கின்றார்-எ-று

அ-கை. காரியகாரண மிதந்தன்மையுடைய தென்பதை மேலருளிச்செய்கின்றார்.

கவி. அரியாப்பொருள்காரணமாகைகுறித்
தரியும்பொருள் காரியமாமூலகில்
நெரியாற்றிகழ் நான்மறையந்தமெலாம்
நீயன்றெனவோது நிரந்தரமே.

க-து. காரியமனறு நீ காரணமாமெனை
ஆரியன்மகிழ்வோ டடிமைக்குரைத்து

இ-ள். (உலகிற்குரிக்கரியாப்பொருள் காரணமாகை) உலகத்தினிடத்திலே ஒரு சுட்டுதலினால் அரிவதற்குஅரிதாகிய பொருளானது காரமணமாகுதல்-அவையெவையெனில் மூலகாரணமானபிரமம் (உலகிற்குரித்தரியும் பொருள்காரியமாம்) உலகத்தினிடத்திலே மதித்தரிகின்ற பொருளானது காரியமாகுதல்அஃதெவை யெனில் தேகாதிப்ரவஞ்சம் ஆகையால்(நெரியாற்றிகழ் நான்மறையுந் தமெலாநிரந்தரநீயன்றெனவோது) நன்மார்க்கத்தாற் பிரகாசம் பொருந்தியநான்குவேதத்தின் முடிவுகளெல்லாம் எப்பொழுதுந்தேகாதிபிர வஞ்சமான காரியமாகுதலே நீயன்றென்றுசொல்லுகின்றது-எ-று—உலகுருரித்த என்பதைஇரணடிடத்துங்கூட்டுகே. ௫௮

அ-கை. பிரமசைதன்னியத்தைக் கட்புலனா லரியத்தக்கதன்றென்று மேலருளிச் செய்கின்றார்.

கவி. அறியும்பொருளன் றறியாப்பொருளன்
றறிவாகிய நீயெனு மப்பொருடான்
பொறியின்வழிநின் றறியும்பொருளோ
போதக்கண்விழித் தறியும்பொருளே.

க-து. ஊனநோக்கத்தி லுணர்ந்தறியாப்பொருள்
ஞானநோக்கத்தில் நாடுமென்றது.

இ-ள். (நீயென்றும் அறிவாகிய வப்பொருடான்) நீயென்றுசொல்லபட்ட அறிவாகிய அந்தப் பொருளானது— (பொறியின்வழி நின்றறியும் பொருளோ அறியும்பொருளன்று) சுரோத்ராதி ஞானப்பொறியின்வழியாக நின்றறிகின்றபொருளா-அறிகின்றபொருளல்ல (போதக்கண்விழித்தறியாப்பொருளன்றறியும்பொருள்) ஞானக்கண்ணைவிழித்தறியாதபொருளல்லஅறிகின்றபொருள்-எ-று—(இதற்குப்பிரமாணம்- திருமந்திரம்) முகத்துக்கண்கொண்டுபார்க்கின்றமூடர்காள்- அகத்துக்கண்கொண்டு பார்ப்பதேயானந்தம் மகட்குத்தாயார் மணாளனோ டாடிய சுகத்தைச்சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே என்பதனாற் காண்க. ௫௯

ஆ-கை, ஞானக்கண்ணாலறியும்பொருள் யாதென்றுமாணாக்கன் வினவவாக்கியார்த்தத்தைக் குறிப்பா யருளிச் செய்கின்றார்.

கவி. வேதப்பொருடா னிதுவேறுசொல்லும்
வினையாவையு மன்றொருவேறுமிலாய்
போதப்பொரு டந்தமறைக்கணியாம்
புனிதப்பொரு டத்துவமசிப்பொருளே.

க-து அத்வைதசாம வாரணமுடிவாகுந்
சுத்தநற்றத்வமசிப் பொருளென்றது

இ-ள். (வேதப்பொருடானிது) வேதஞ்சொல்லப்பட்ட அர்த்தமெல்லாமிது ((வேறுசொலும் வினையாவையுமன்று) இதையன்றி வேற்றுமையாகச் சொல்லப்பட்ட கருத்துகளெல்லாமன்று (ஒருவேறுமிலாப்போதப்பொருடந்த மறைக்கணியாம்) ஒன்றேனும்போதமில்லாத அபேதஞானார்த்தத்தைத் தரப்பட்டசாமவேதத்திற்கு ஆபரணம்போன்ற (புனிதப்பொருடத்வமசிப்பொருளே) சுத்தார்த்தமான தத்வமசியென்னுமகாவாக்கியார்த்தம்-எ-று. வேதப் பொருடந்தமறைக்காணியா மென்றமையால் சாமவேதமென்றுபொருட்படுத்த லாயிற்று. ௬௰

அ-கை. திரிபதார்த்தையும் விகசிதமாக விரித்தருளிச்செய்கின்றார்.

கலி. நிமலமாம்பர மதுவெனும்பொரு
ணீயெனும்பொருள் சீவனே
மலமான விண்டயிக்கிய
மசிபதப்பொருளாவதே.

க-ஞ. தம்பதந்தொம்பதந் தானது நீயெனும்
இம்பரில்சிபதமேகமென் றுரைத்தது.

இ-ள். (அதுவெனும்பொருணிமலமாம்பரம்) அதுவென்னும் அர்த்தமானது மலரகிதமான பிரமம் அதுதத்பதம் (நீயெனும்பொருள் சீவன்) நீயென்னும்அர்த்தமானது சீவன் இதுத்வம்பதம் அசிபதப்பொருளாவது (அமலமான விரண்டயிக்கியம்) அசிபதப்பொருள் அர்த்தமானது மலரகிதமாகிய ஜீவேஸ்வரானிரண்டும் ஏகமாகின்றது இது அசிபதம் எ-று— அது நீயாமென்பதற்குகாரணம்) (ஒழிவிலொடுக்கம்) உனையுணர்த்திப்பாச முதலியுடையோன்- றனையுணர்த்தில் நீயே தலைமாம் - கனலை- வி றகிடமாக்காணிலதன்

வெம்மையை வேருக்கி - அறியகிலாப்போலது நீயாமென
ன்பதனுற்காண்க ௬௯

அ-கை ஆசாரியரை மாணாக்கன்வணங்கிசிவனும்பிரமமும்எப்படி அயிக்கியங் கூடுமென்றுவினவுகின்றதை அருளிச்செய்கின்றார்

கவி அருமையாகிய பிரமமுன்னிலை
யாகுமாருயிர் பின்னிலை
இருமையாகு மிரண்டையிக்கிய
மெய்துமாறெவ னென்னவே.

க - து. பிரமமுன்னிடம் பின்னிடமாருயிர்
இருபதமொன்று வதெப்படியென்றது

இ-ள். (அருமையாகியபிரமமுன்னிலை யாகும்) பெருமையினையுள்ள பிரமம்முதன்மையான இடமாயிருக்கின்றது (ஆருயிர்பின்னிலை பலரிடத்தும் விகுதியாயிருக்கின்றசீவன் கடையாகிய பின்னிடமாயிருக்கின்றது' இருமையாகுமிரண்டையிக்கிய மெய்துமாறெவனென்னவே அம்மை யிம்மையாகிய இரண்டிடத்திலுமிருக்கின்ற பெருமைசிறுமைபொருந்தியபரமாத்மா சீவாத்மா வென்னும் இரண்டும் இரண்டறப் பொருந்துவதை யெப்படியென்றுமாணாக்கன்கேட்க ஆசாரியர்விடையருளஆரம்பித்தனரென்பது.

அ-கை. சீவேஸ்வரருக்கு உபாதிகளால்பேதமென்று மேலருளிச்செய்கின்றார்,

கவி உபாதியால்வருபேதமேயிவர்
பேதமொன்றுமுயிர்க்குநுங்
கபாதியாமுடல்போலிறைக்குள
காரணாதிகளாயமே.

க - து. காரியவுடலுயிர்க் கடைடதுபோலவே
காரணவுடலுள வீசற்குமென்றது

இ-ள். (உபாதியால்வருபேதமேயிவர்பேதம்) ஜீவேஸ்வரர்களுக்குஉபாதியினாலே வரப்பட்டபேதமேயன்றி இவர்கள்பேதமன்று. அதெப்படியெனில் (ஒன்றுயிர்க்குறுங்கபாதியா முடல்போல்) ஓராதாரத்தைப்பற்றிநிற்குமஆத்மாவுக்குப் பொருந்திய கபமாதியாகச் சொல்லப்பட்டஉடலைப்போல (இறைக்குள காரணாதி காயங்கள்) ஈஸ்வரனுக்கும்உண்டு காரணமாகியஉடல் எ-று. ஜீவனுக்குஉபாதியாகிய உடலெவையெனில் தேகம்- இந்திரியம்-மனம்புந்தி-அகங்காரம்-சித்தம்-பிராணவாயு - ஆகியவேழில்- தேகமாவது ஞானேந்திரியமான ஸ்ரோத்ராதிரு இவற்றின்விஷயமான சப்தாதி-ரு-ஆகிய இவைதேகம்-க-இந்திரியமாவது-கன்மேந்திரியமானவாக்காதி-ரு-இவற்றின்விஷயமானவசனாதி-ரு-ஆகியஇவை யிந்திரியம்-உஅந்தக்கரணம்-ச-பிராணவாயு-க-ஆக-எ-ம் ஜீவோபாதிஏழெனவறிக—கபம்-பித்தம்-வாதம் • இந்நோய்க்குரியதேகமாகையால் கபாதியாமுடலென்றார்.

அ-கை. மேல்ஈஸ்வரோபாதியை அருளிச்செய்கின்றார்,

கவி ஈசன்முற்றறிவாற்சியாதி
எனைக்குமேது வியம்புமா
ஈசன்னிருபாதியாவனே
காரணாதிக ளாவதே

க - அ. ஆதிஈசனிற்பாவனைமீறதா
வோதியபரனுக்குபாதியேழுரைத்தது,

இ-ள். (காரணாதிகளாவது ஈஸ்வரனுக்குரிய காரணவுபாதிகள் ஏழாவன - ஸர்வஞ்ஞத்வம் - ஸர்வகாரணத்வம் ஸர்வாந்தரியாமித்வம் - ஸர்வேஸ்வரத்வம் ஸர்வஸிருஷ்டத்வம்-ஸர்வஸ்திதித்வம்-ஸர்வஸம்ஹாரத்வம் ஆ

கியவேழில் ஈசன் ஸர்வஜ்ஞன்-அதாவது இந்திரியங்களெல்லாம் ஒன்றறிந்த தொன்றறியாத படியினாலும் தான் சர்வத்தையும் அறிகையினாலேயும் சர்வஜ்ஞனென்றது முற்றறிவான் சர்வகாரணன் அதாவது இந்திரியங்களெல்லாமறிந்தும் தானறியாமலிற்கையினால் சர்வகாரணனென்றது (வியாபி சர்வாந்திரியாமி அதாவது இந்திரியங்களுக்கெல்லாம் உள்ளீடாநின்றறிகையினால் சர்வாந்திரியாமியென்றது (எவைக்குமேதகு) ஸர்வேஸ்வரன் அதாவது இந்திரியங்களுக்கெல்லாமேலாய்நின்று விளங்குகையினால்சர்வேஸ்வரனென்றது (இயம்புமாகாசகன்) சர்வசிருஷ்டி அதாவது இந்திரியங்களெல்லாம் தன்னுக்குள்ளேதோன்றுகையினால் சர்வசிருஷ்டியென்றது நிருபாதி) சர்வஸ்திதி அதாவது இந்திரியங்களை யெல்லாந்தானே இரட்சிக்கையினாலே சர்வஸ்திதியென்றது (பாவனைசர்வஸம்ஹாரன் அதாவது இந்திரியங்களெல்லாந்தன்னுக்குள்ளே அடங்குகையினால் சர்வசம்ஹாரனென்றது என்றவாறு.

அ-கை மேல் அசுத்த சுத்தங்களை உரைக்கின்றோமென்பதை அருளிச்செய்கின்றார்,

கவி நீதியாவிருபாதிநீக்கிடல்
 நீயெனசொல் பதத்தினும்
 ஆதியாகியதற்பதத்தும்
 அசுத்தசுத்த முரைத்துமே,

க-து. வழாபுநீக்கிடி னியல்சுத்தாசுத்தமும்
 தாழ்வுய ரிரண்டி னுஞ்சாற்றுதுமென்றது.

இ-ள், (நீதியாவிருபாதிநீக்கிடினீயெனச்சொல் பதத்தினுமகியாயமாக இரண்டுபாதியையும் நீக்கினல் த்வம்பதார்த்தமாகிய நீயெனுமுயிரனிடத்தும (ஆதியாகியதத்

ப்தத்து மசுத்தசுத்த முனைத்துமே முதன்மையாகின்ற தத்பதார்த்தமான அதுவென்ற ஈஸ்வரனிடத்தும் இருக்கின்ற அசுத்தத்தையுஞ் சுத்தத்தையுஞ் சொல்லுகின்றோம்-எ-று. ௬௫

ஆ-கை மேல்ஜீவஅசுத்த சுத்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி, ஆகமுன்றிகழ்மேழுநானெனல்
த்வம்பதத்தி லசுத்தமே
சோகமின்றிய சான்றுநானெனல்
த்வம்பதப்பொருள்சுத்தமே.

க-து. காணப்படாது நானென்றசுத்தமும்
சாக்ஷியேசுத்தந் தானுயிர்க்கென்றது.

இ-ள், (ஆகமுன்றிகழ்மேழுநானெனல் த்வம்பதத்தில சுத்தமே) முன்னெறியச்சொன்ன தேக முதலிய வுபாதியேழையுநானென்று அபிமானிக்கிருத்தல்த்வம்பதமான சீவனுக்கு அசுத்தம் (சோகமின்றியசான்று நானெனல் த்வம்பதப்பொருள்சுத்தமே) முன்சொன்னதேக முதலியவுபாதியேழையும் நீங்கி அந்தமயக்கமில்லாமல்நாம்சாக்ஷியென்றுகாணல் த்வம்பதார்த்தமாகிய நீயென்ற சீவனுக்குசுத்தம்-எ-று. ௬௬

ஆ-கை. மேல்ஈஸ்வர சுத்தாசுத்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி. ஆகிலகாரண மேழுநானெனல்
தத்பதத்தி லசுத்தமே
சகலகாரண சான்றுநானெனல்
தத்பதப்பொருள் சுத்தமே.

க-து காரணங்கானெனை யீசர்க்கசுத்தமும்
ஆரணங்கியே சுத்தமென்றறைந்தது,

இ-ள். (அகிலகாரணமேழும் காரணனெனபதத் பதத்திலெ சுத்தமே எல்லாவுலகத்திற்குங் காரணமாகின்ற ஏழுபாதியையுந் தானாய்க்கொண்டிருந்த காலந்தத்பதப்பொருளாகின்ற ஈஸ்வரனுக்கு அசுத்தமாகின்றதுசகல காரணசாணுநானெனல் தத்பதப்பொருள்சுத்தமே)ஏழுபாதியையுநீங்கி எல்லாக்காரணத்திற்குஞ் சாக்ஷிதானா யிருந்தகாலந் தத்பதப்பொருளான ஈஸ்வரனுக்கு சுத்தமாகின்றது-எ-று.

௯௭

அ-கை மேல் அஸிபதார்த்தமிஃதென அருளிச்செய்கின்றார்.

கலி. செறிந்தகாரண காரியங்கள்
சிதைந்துமேலுறசித்ததாய்
அறிந்தவாதனை தானுமற்றது
அசிபதப்பொருளாவதே

க - உ இதுவதுவுபாதியற்றேகமேநாமெனும்
அதைமறந்ததுவே அஸிபதமென்றது

இ-ள், (செறிந்தகாரணகாரியங்கள்)சிதைந்துமேலுறசித்ததாய்நெருங்கிய காரணஉபாதி காரியஉபாதிகள்கழிந்துமுடிவிற்பொருந்திய சித்தேகநாமென்று (அறிந்தவாதனைதானுமற்றது அசிபதப்பொருளாவதே) அறிகின்றவஅறிவானதானுமில்லாமல் அதுவாகின்றதே அசிபதத்திற்கர்த்தமாகின்றது.

௯௮

அ-கை, மேல்முக்கிய லக்ஷியார்த்தங்களை அருளிச்செய்கின்றார்.

கலி, அசுத்தமாகிய திருபதத்தினு
முக்கியப் பொருளாவதே
விசுத்தமான இலக்கியப்பொரு
ளென்றுசொல்லுவர்விமலரே,

க - உ, சுத்தமற்றிருக்கின் முக்யமிரண்டினும்
சுத்தமுற்றிருப்ப இலக்கியமென்றது,

இ-ள். (அசுத்தமாகியதிரு பதத்தினுமுக்கியப் பொருளாவதே) அசுத்தமாகின்றது தத்பதம்-த்வம்பதம் இவ்விரண்டினு மிருந்தபோது முக்கியப்பொருளென்றும்) விசுத்தமான இலக்கியப் பொருளென்று சொல்லுவர் விமலரே) சுத்தமாகின்றது தத்பதம்த்வம்பதம் இவ்விரண்டினுமிருந்தபோது லக்ஷியப்பொருளென்று சொல்லுவார் மலாதீதராகிய பெரியோர்கள்-எ-று.—இதன்றாற் பரியம் = ஜீவேஸ்வரஸ்வரூபம்- உபாதியுடன் சம்பந்தித்துநின்றபோது முக்கியமென்றும் உபாதியைப் பிரிந்தபோது லக்ஷியமென்று- உபாதியை நானென்றபோது அசுத்தமென்றும் உபாதிக்குசாக்ஷியானபோது சுத்தமென்றுஞ் ௯௯
சொல்லியதாம்.

அ-கை, மேல்முக்கிய லக்ஷியார்த்தங்களை அருளிச் செய்கின்றார்.

கலி, முரண்டசிவ பரங்கடம்முடன்
முக்கியப் பொருளாவதே
இரண்டில்வேறறு சிற்சொரூப
மிலக்கியப் பொருளாவதே.

௯௰, இரண்டுடலோடி மிருப்பதுமுக்கியம்
இரண்டுடலற்ற திலக்கியமென்றது,

இ-ள், முரண்டசிவ பரங்கடம்முடன் முக்கியப் பொருளாவதே) சிவபரங்கள்மாறுபாடாகின்ற காரியகாரண உடலில் சம்பந்தித்துநின்றபோது முக்கியப் பொருளென்றும் இரண்டில்வேறறு சிற்சொரூபமிலக்கியப் பொருளாவதே) இவ்விரண்டுபாதியையுமநீங்கிசாக்ஷியாய் நின்றபோது லக்ஷியப்பொருளென்றுஞ் சொல்லப்படுகின்றது என்றவாறு,

அ-கை-மேல் உபாதித்வய மும்நீக்கில் ஏகவஸ்து வாமென்பதை அருளிச்செய்கின்றார்

கவி- லக்ஷியப்பர சிவர்தங்க
ளுடம்பிரண்டு மிலக்கணா
வாக்கியப்படி நீக்கிறுலொரு
வஸ்துவே பரவஸ்துவே,

க - து இலக்கணத்தாலுட லிரண்டையுநீக்கிடின்
இலக்கமாம் வஸ்துசொரூபமென்றென்றது

இ-ள் லக்ஷியப்பரசிவர்தங்களுடம் பிரண்டும்உயர்ச்சியையுடைய பரத்தினதுஉடலும் தாழ்வையுடையசிவனதுஉடலும் ஆகிய விரண்டையும் (இலக்கணவாக்கியப்படி நீக்கினுல்) வேதஞ்சொல்லிய இலக்கணைக்கணவாக்கியப் பிரகாரம் விலக்கிப் பார்த்தால் (ஒருவஸ்துவே பரவஸ்துவே) இரண்டற்ற ஒருவஸ்து வாகியபிரமமாய்-எ-று—உயர்ச்சி யென்றமையால் தாழ்வு வருவிக்கப்பட்டது.

எக

அ-கை- முன்சொன்ன இலக்கண யித்தனையென்பதை மேலருளிச்செய்கின்றார்.

கவி- ஓரில்விட்டதும் விட்டிடாததும்
உபயமும்மென வுணாவுளோர்
தேரிலக்கணை திரிவிதத்தில்
இசைப்பர்மற்ற தியம்புவாம்.

க-து- விட்டதும் விடாததுமிரண்டு முரைத்துமேல்
விட்டுவிடாததும் விளம்புவோமென்றது,

இ-ள்- (ஓரில்விட்டதும் விட்டிடாததுமுபயமும்மென) அவைகை ஆராய்ந்தறியுமிடத்து விட்டலக்கணைவிடாதலக்கணை விட்டுவிடாதலக்கணை யென்றும் (உணர்வுளோர் தேரிலக்கணை திரிவிதத்திலிசைப்பர்) அறிவுடையோர்கள் வேதங்களை ஆராய்ந்து அதிலுள்ளலக்ஷணைவ

க்கிய மூன்றுவிதமாகச் சொல்லுவார்கள் (மற்றதியம்புவா
ம் அதுகளைச் சொல்லுகின்றோம்-எ-று ௭௨

அ-கை முன்சொன்ன லக்ஷணைமூன்றினுள்விட்ட
லக்ஷணையை அருளிச்செய்கின்றார்

கலி- மஞ்சுகூப்பிடுதென்றல்போலவும்
வடபகிரதி யுள்ளதே
விஞ்சுகோஷமதென்றல் போலவும்
விட்டலக்கணையாகுமே.

க - து கங்கையுமஞ்சமும் கழுறுமோவதுபோல்
அங்கமுனக்குவேறெனவுரைத்தது.

இ-ள்- (மஞ்சுகூப்பிடு தென்றல் போலவும்) கட்டிலானது கூப்பிடுதென்றொருவன் சொல்லும் அர்த்தம்போலவும் (வடபகிரதியுள்ளதேவிஞ்சுகோஷமதென்றல்போலவும்) வடகங்கைக்கணுள்ளது இடைச்சேரியென்றொருவன்சொல்லும்அர்த்தம் போலவும் (விட்டலக்கணையாவதிது- எ-று —[இதன்றாற்பரியம்] கட்டில்கூப்பிட்டதென்றும்கங்கைக்கணிடைச் சேரியுள்ளதென்றும் ஒருவன் சொல்லுமிடத்து - மஞ்சமானது மரம்மரமானது கூப்பிடுமோ - மஞ்சத்திலொருவனிருந்துகூப்பிட்டானென்று கொள்ளவேண்டிற்று - கங்கையானது - ஜலம் - ஜலத்திலேஇடைச்சேரிஇருக்கமாட்டாது கங்கைக்கரையிலே இடைச்சேரியிருக்கின்றதென்றுகொள்ளவேண்டிற்று - இப்படிப்போலஸப்த உபாதிக்குஞ்சீவன் சாக்ஷியாயிருக்கின்றானென்றுகண்டறிவதாம்இது சமசர்க்கவாக்கியமாகிய விட்டலக்ஷணையாம். ௭௩

அ-கை- மேல்விடாதலக்ஷணையை அருளிச்செய்கின்றார்.

தேவதத்தனென்னும் பொருட்படி
சிந்தைசெய்திருந்தீரவே

க - து அவனேயிவனென்னுமாறுக்கவழியே
இசணியதுவென்னுமியல்பையுரைத்தது,

இ-ள்-(மேவும்விட்டுவிடாதலக்கணை மெய்ம்மையாகே
னில்)சம்பந்தம்விட்டுவிடாத லக்ஷணையினது உண்மை
யாகென்றால்(இந்தவத்தனென்னும்பொருட்படி சிந்தைசெ
ய்திருந்தீரவே)இந்த விடத்திற் கண்டது அந்தேவதத்த
னென்ற அர்த்தப்படி சிந்திக்கில் சந்தேகந்தீர்ந்துபோகி
றது ஏ-து—(இதன்றாற்பரியம்)முன்சொல்லிய ஸம்ஸ
ர்க்கவாக்கியமும்விசிஷ்ட வாக்கியமுஞ் சொல்லப்பட்ட
உபாதிதீர்ந்து லக்ஷியமானனென்கிறவாஸநாதோஷமா
னியகுற்றம் அகண்டவாக்கியத்தினாலேநீக்கிஏகம்பண்ண
ப்படும் - அகண்டவாக்கியமாவது - ஸோ யந்தேவதத்தன்
என்றது ஒருதேவதத்தனென்னு புருஷனுடன்நாம்சிலகால
ங்கூடியிருந்தோம்சிறிது நாளுக்குப்பின்புபிரிந்துபோயி
னன் அநேகநாளுக்குப் பின்புமதுரையில் இராஜாவாக
க்கண்டோம்பின்புபிரிந்து போயினேம்சிலநாளுக்குப்பி
ன்புசிதம்பரத்தில் சந்நியாசியாயிருக்கக்கண்டோம்அப்
பொழுது இவன் அந்தேவதத்தனோவென்றுசந்தேகிக்கை
யில் அவன்முகத்திலே மறுவுண்டோவென்று பார்க்கும்
போது அடையாள மிருக்கையால் அவனேயிவனென்று
சொல்லப்பட்டது அப்போது அவனை இரண்டிடமும் இ
ரண்டுகாலமும் விட்டன அவைவிட்டுப்போகவிடாமனி
ன்றவன்ஒருதேவதத்தன்மாத்திரம் அவனேபோல்சுயமப
காகிய ஜீவாபாதிக்குந் தத்பதமாகியபாவுபாதிக்கு
சாக்ஷியாய்நின்றவன் ஒருவனே இப்படியிரண்டுபாதிய
ம்போக இரண்டிடத்துநின்ற ஜீவனைபரன்பரனேயென்

க-னென்று ஏகமாகக்காண்பது விட்டுவிடாதலக்கணைய
மென்றதாம்

எ

அ-கை- மேல்விட்டுவிடாதலக்கணையின்படி நீகொ
ள்ளவேண்டியதென்பதை அருளிச்செய்கின்றார்

கவி· விட்டலககணைதனையும்விட்டு
விடாதலக்கணை தனையுநீ
விட்டுவிட்டுவிடாதலக்கணை
யால்விளங்கு விளங்குவே

க - று முன்னிலக்கணை முழுதையுநீக்கி
பின்னொரு விலக்கணை யருந்தமாகென்றது

இ-ள் (விட்டலக்கனைதனையும்விட்டு) கட்டில் கூப்பிடு
மோ ஆகிலொருவிடளிருந்து கூப்பிடுகின்றானென்றும் க
நகைசந்திக்குமா கங்கைக்கரையிலிருக்கும் இடைச்சேரி
சங்க மென்றறிவது போலும் எழுபாதிக்குஞ் சாக்ஷியாயி
ருந்தான்ஜீவனென்றறியச்செய்த (விட்டலக்கணையும் விட்
டுவிடாதலக்கணையும்விட்டு) சிவப்புநிற்கின்றதுவெள்ளை
போகின்றதென்னில் சடமானதிறம்ஓடுமா நிற்குமாகுதி
ரையைப் பசுவைம்பற்றிநிற்குமோடுமென்றறிவது போ
லும் எழுதாதிக்குஞ் சாக்ஷியாயிறந்தபரமென்றறிவித்த
விடாதலக்கணையும்விட்டு விடாலக்கணையால்விளங்கவே
விளங்குமாணுக்கனே நீமுன் சொல்லிய இரண்டிலக்கணை
யின்பயனையும் விட்டுவிட்டுவிடாத லக்கணையினலேபிர
காசமாகத்தெளிவாய்-எ-று—(இதன்றாற்பரியம்) தேவத
த்தனைவன் இரண்டிடமும் இரண்டுகாலமும் நீக்கிப்பா
ர்க்கில் ஒருதேவதத்தனேயனது போலகாரியஉபாதியையு

ம்காரணஉபாதியையும் நீக்கிப்பார்க்கில்பரிபூரணமாய்வி ளங்குகின்றபரமேநீயென்றறிவித்ததாம் எ-சு

கவி- போதுமேவியதேயம்விட்டொரு
புருடனைக்கொளுமாறுபோல்
ஓதுமீருடல் கண்டுவிட்டகன்
உண்மைகாண வுணர்ந்திடே.

க - து காலதேயம்விட்டவன்றனைக்காண்டல்போல்
தூலம்விட்டுண்மையைத்தொகுத்தறியென்றது

இ-ள், போதுமேவிய தேயம்விட்டொரு புருடனைக் கொளுமாறுபோல்) அந்தக்காலம்இந்தக்காலமென்று சொல்லுங்காலத்தையும்-அந்ததேயம்இந்ததேயமென்று சொல்லுந்தேயத்தையும் - நீக்கிவிட்டுஒருதேவதத்தனாகி யபுருடனை அவன்காணிவனென்று அறிந்துகொளுமவ ஙகசோல(ஓதுமீருடல்கண்டுவிட்டகனுண்மை காண வு ணர்ந்திடே)முன்சொன்னகாரியகாரணஉடல் இரண்டை யுமசத்தென்று அறிந்துநீக்கிஇரண்டிடத்துமிருந்தது ஒன் றுதானென்றுஅந்தவுண்மையைக்கண்டறிந்துகொள்ளென

அ - கை- மேல் உபாதிகளை நீக்கி சாக்ஷியைக்கண் டுகொளென்பதை அருளிச்செய்கின்றார்

கவி. பிரியாவுயிர் காரியமாமுடலும்
பிரமத்துறு காரணமாமுடலும்
கரியாகிய வாதனையுந்தவிரக்
காட்டிப்படிகண்டுகொள்கண்ணுறவே

க - து ஈசனுமிருடலிரண்டையுநீத்துநீ
மாசறுசாக்ஷியின் வழிகாணென்றது

இ-ள்(உயிர்பிரியாக் காரியமாமுடலும்)சீவனைவிட்டுப் பிரியாதகாரிய வுபாதியென்னுந் தேகமும்(பிரமத் துறுகாரணமாமுடலும்) பிரமத்தைப்பொ

றுந்தியகாரணவுபாதியென்னுந் தேகமும் (கரியாகிய வரதனையுந் தவிரக்காட்டும்படி) சாட்சியாகிய வாசனை வுபாதியுநீக்கநீங்காண்பித்தபடியே (கண்டுகொள்கண்ணுறவே) அறிவினிடமாகப் பொருந்தக்கண்டுகொள்-எ-று

அ-கை. அந்தக்காரணங்களிருந்தாலும் நீங்கினாலும் சைதன்னியத்தை யறியக்கூடாதென்பதைமேலருளிச்செய்கின்றார்,

கலி. காரணத்திரளிற் பினுமப்பொருளைக்
காணக்கிடையாதவை யையறவே
மரணப்படினும் மதுகண்டுகொளும்
வழியில்லையெனும் படி நீமதியே.

க-து. காரணங்களிற்பினுங் காண்டற்கரியதை
மரணங்களாயினும் வழியில்லை யென்றது.

இ-ள், (காரணத்திரளிற்பினு மப்பொருளைக்காணக்கிடையாது) அந்தக்காரணக் கூட்டங்கள் சமைந்து கெவுரவங்கெடாமனிற்கினும் அந்தப்பிரமத்தைக்காணபது அரிது அவையைசயறவே மரணப்படினு மதுகண்டு கொளும் வழியில்லை) அவ்வந்தக்காரணங்கள் இறப்பினும் பிரமத்தைக்கண்டுகொள்வதற்கு மார்க்கமில்லை) எனும்படி நீமதியேயென்றபிரகாரத்தை யுனதுவிவேகத்தினாலே அறிந்துகொள்வாய் என்றவாறு —இதன்றாற்பரியம்) அந்தக்காரணமானது ஆதித்தன் சந்நிதியில் வைத்ததீபம் போல கெவுரவங்கெட்டிருந்தால் சைதன்னியத்தைப் பொருந்தலாமென்றது ஆதித்தனைப்போல அறிவுதீபம் போல அந்தக்காரணமெனவறிக.

எகூ

அ-கை, அவ்வாத்திரத்தில் அந்தக்கரணங்கள் வியாபிக்கின்றதை மேலருளிச்செய்கின்றார்.

னபிரமமாகுகையே (புகலுற்ற)வேதமுடிவாகிய மகாவாக்கியஞ்சொல்லுகின்ற தத்வமசியென்னும்)தத்பதம்-த்வம்பதம் அசிபதம்என்னும்(மும்பதத்தின் முடிபொருளாவதே) மூன்றுபதத்தினுமுடிவினின்ற பதத்தினேலேகமாகியஅர்த்தம்-எ-று,—என்னவேசீவேஸ்வர வாச்சியாதிக்கிகூடஸ்தபிரமமாகுமென்பார் முப்பதத்தின்முடிபொருளாவதென்றார்— (இதற்குகாரணம் சொரூபானந்தர் அன்னைப்பத்து) தத்பதந்தொம்பதந் தாமாய ஸப்பதம்- இப்பதமானவ ரன்னையென்னும் இப்பதமாயவியல்லையிதுவென்று செப்பமுடியுமோ வன்னையென்னும்-என் பதனூற்காண்க அ|௫

அ-கை. மேல்வேதாந்தஉபதேசஞ்செய்த ஆசாரியனாமாணுக்கன்வணங்கிவிண்ணப்பம்பண்ணிக்கொள்வதை அருளிச்செய்கின்றார்

௬வி. விமலப்பொருட்சுருதிநெறியிற்பெறக்கருணை-
நிதிகூறவேஅமலப்பொருட்பெறுதலருமைத்தே
னக்கமுறியடிவீழவே

க-து. சுருதிநெறிபெறச் சொற்குருபதத்தினில்
ஆரியனென்றவனு மனைந்துதொழுதது

இ-ள் (விமலப்பொருள்)சுத்தார்த்தமாகிய பிரமத்தை சுருதிநெறியிற்பெற வேதஞ்சொல்லியமார்க்கப்படிபெற்றுக்கொள்ள(கருணைநிதிகூறவே கிருபாநிதியாகிய ஆசாரியர்அருளிச்செய்யவே(அமலப்பொருட்பெறுதல்) சுத்தார்த்தமானபிரமத்தை அடியேன்பெற்றுக் கொள்வது (அருமைத்தெனக்கமுறியடிவீழவே) அரியதன்மை யென்று விண்ணப்பஞ்செய்து ஆசாரியர் திருவடிகளில் பா[illegible]ங்கமாய்விழுந்துசேவிக்க-எ-று அ|௬

அ-கை, சேவித்துநிற்கு மாணாக்கனுக்கு ஆசாரியர் உளங்களிகூர்ந்து பிரமோபதேசஞ்செய்யும் பொருட்டு பூர்ணாபிஷேகஞ்செய்ததை மேலருளிச் செய்கின்றார்,

கவி- தமரக்கலைக்களவுதெரிவற்ற தற்பொருளதனை யீகுவான்- அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு செய்தபிஷேகமே

க-து. தற்பொருளருள்குரு சிவஞானனுக்கு
நற்பதப்புனலபிஷேகமுநவின்றது.

இ-ள். தமரக்கலைக்களவு தெரிவங்களெனிக்கப்பட்டகலை ஞானங்களினாலளவிட்டறிதற்கரிய (தற்பொருளதனையீகுவான்) அதுவென்னுமர்த்தமான வதனை அளித்தருளு மபொருட்டு (அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு) தேவர்களுக்கும் அளவிடற்கரியமகிமைதங்கிய பாதோதகத்தினாலே செய்த அபிஷேகமே சீஷனுக்கு அபிஷேகஞ் செய்தருளி-எ-று- ௮௫

அ-கை. ஆசாரியர்தனது சேஷமளித்து மாணாக்கனுடற்பகைநீக்கியதை மேலருளிச்செய்கின்றார்-

கவி. பவளத்தில்லைவைத்தமுதினின் மிச்சிலிட்டினிய பரிவோடுமாதவளப்பொடிக்கவசமெனவிட்டுடற்பகைகடலைசாயவே

க-து- வெண்பொடியளித்தவன் வினைகணீக்கியபின்
உண்டதன்சேட முதவியதுரைத்தது.

இ-ள். (உடற்பகைகடலைசாய) உடற்பகைகளும் உயிர்ப்பகைகளும்உட்பகைகளும்நலிபெடாமல்நீக்கும்பொருட்டு (மாதவளப்பொடிக் கவசமெனவிட்டு) பெருமையுந்தூல்லியமுமுள்ள விபூதியினாலேகவசங்கரித்ததுபோல நுதல்முதற் றேகத்திற்றரித்து (பவளத்தில்லைவைத்தமுதினினிய) தமது அதரத்தில்வைத்த அமுதினை மிசி

அ-கை, சேவித்துநிற்கு மாணாக்கனுக்கு ஆசாரியர் உளங்களிகூர்ந்து பிரமோபதேசஞ்செய்யும் பொருட்டு பூர்ணாபிஷேகஞ்செய்ததை மேலருளிச் செய்கின்றார்,

கவி- தமரக்கலைக்களவுதெரிவற்ற தற்பொருளதனை யி குவான்- அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு செய்தபி ஷேகமே

க-து. தற்பொருளருள்குரு சிவஞானனுக்கு
நற்பதப்புனலபிஷேகமுரைகின்றது.

இ-ள். தமரக்கலைக்களவு தெரிவங்கலலிக்கப்பட்டகலை ஞானங்களினாலளவிட்டறிதற்கரிய (தற்பொருளதனையி குவான்) அதுவென்னுமர்த்தமான வதனை அளிக்கருணை ய பொருட்டு (அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு) தே வர்களுக்கும் அளவிடற்கரியமகிமைதங்கிய பாதோதக த்தினாலே செய்தஅபிஷேகமேசிஷனுக்கு அபிஷேகஞ் செய்தருளி-எ-று- அ௫

அ-கை. ஆசாரியர்தனது சேஷமளித்து மாணாக்க னுடற்பகைநீக்கியதை மேலருளிச்செய்கின்றார்-

கவி. பவளத்தில்லைவித்தமுதினின் மிச்சிலிட்டினிய ப ரிவோடுமாதவளப்பொடிக்கவசமெனவிட்டுடற்பகைகட லைசாயவே

க-து- வெண்பொடியளித்தவன் வினைகணீங்கியபின்
உண்டதன்சேட முதவியதுரைத்தது.

இ-ள். (உடற்பகைகடலைசாய) உடற்பகைகளும் உயி ர்ப்பகைகளும்உட்பகைகளும்நலைபெடாமல்நீங்கும்பொ ருட்டு (மாதவளப்பொடிக் கவசமெனவிட்டு) பெருமை யுந்துல்லியமுமுள்ள விபூதியினாலேகவசங்கரித்தது போ லநாகல்முகற் தேகத்திற்றரித்து(பவளத்தில்லைத்தமு தினினினிய) தமது அதரத்தில்லைத்த அமுதினை மிசி

கலி-நனவைத்துவக்கிமுடி துரியத்தைமுற்ற
விறைநவில்நீதியே - மனவர்க்கமற்றநுபவ
முற்றிசிற்கனவின் வழியோதுவான்

க-து கண்டல்காணுதலை காணாமடங்கியே
கண்டவநுபவங் கழறுவனென்றது

இ-ள் (நனவைத்துவக்கித் துரியத்தைமுடிமுற்ற) சாக்
கிராவஸ்தை முதலாகத்தொடங்கி துரியமுடிவாக முழு
மையும் (இறைநவில்நீதியே) ஆசாரியரநுக்கிரகஞ் செய்
தருளிய நாயப்படிக்கே (மனவர்க்கமற்ற) மனம்புத்தி அ
கங்காரசித்தங்களும் தனதுசெய்கையற்ற (அநுபவ முற்
றி) அனுபவமுதிர்ந்து (சிற்கனவின் வழியோதுவான்) அ
றிவுசித்திரையிற் கண்டகாட்சிகளைச்சொல்லத் தொடங்
அக
கின்றேன்-எ-று.

அ-கை- சாக்கிரதரிசனத்தை மேலுரைக்கின்றார்

கலி-பூரணமாகியபுறம்புளபுலன்களுமந்தக்கரணம்
யாவையும் வழங்கிடானவெனக்கண்டேன்

க-து. புகலுமீரேழுமே யோகம்பொருந்திடம்
சகமுகநனவெனத் தானறிந்துரைத்தது

இ-ள். (பூரணமாகியபுறம்புளபுலன்களும் நிறைவுசொ
ன்டிராநின்ற புறக்கருவிகளாகிய சத்தாதியைந்தும் வச
னாதியைந்தும் அந்தக்கரணம் யாவையும் வழங்கிட நன
வெனக்கண்டேன்) மனதுகொண்டுகூட்டி உலாவுகின்ற அவி
டத்தைச்சாக்கிரமென்றுகண்டறிந்தேன்-எ-று—யாவை
யுமென்றமையால் பிராணவாயுவையும் அபிமானிவில்லை
யென்றுங்கூட்டிக்கொள்க(இதற்குதாரணம்)உற்றறிவெ
ழுவனவிருளகன்றதுபோல- உதயம்வந்தெழவுடுவொளி
யகன்றனவால்- நற்றுடலுயிர்ப்பொருளப்புடன்கலந்து

யமென்பார் உணர்போதமாந் துரியமென்றார் (அதற்குகாரணம் - தத்வராயசுவாமிகள் பாம்பாட்டி மனமுதலான கரணமெல்லாமாயவருள் செய்தாரானையானோ - நனவிலுங் கனவிலுஞ்சுழுத்தியிலுந் நானேதானே னென்றாய் பாமே - என்பதனாற்காண்க. சுஆ

அ-னக- மேல்பரசாக்கிரதரிசனத்தை யுரைக்கின்றார்.

கவி. துரியமாகியபோதமோர்
துளக்கமற்றனைத்துங்
கரியதாயிருந்திடம்பர
நனவெனக்கண்டேன்

க-ஆ. காட்சியாங்காரணகாரியமனைத்தும்
சாட்சிவைக்கிடம்பர சாக்கிரமென்றது

இ-ள். (துரியமாகியபோதம்) காரியவுபாதியாகிய தூல சூட்சுமகாரண தேகத்திரயமும் நனவுகனவுசுழுப்தி அவஸ்தாத்திரயமும்-விச்வ- தைசத-பிராஞ்ய- அபிமானித்திரயமும் ஆகிய இவைகளைசஞ்சர்க்கவாக்கியத்தால்வேறுசெய்து மெல்லீசெடுத்த நின்றஅறிவு (ஓர் துளக்க மற்றனைத்தும்) ஓரசைவுமின்றிமுனசொல்லிய வனைத்திற்கும் (கரியதாயிருந்திடம்பர நனவெனக்கண்டேன்) சாட்சியாயிருந்த இடத்தைப்பரசாக்கிரமாக தரிசித்தேன் -எ-று. (உதாரணம்) விரிவுறுகாரிய வுபாதிகளெல்லாம்- வேறுசெய்தவிராட்புருடனையனைவும்- கரியதுவாக நின்றனை வைமுழுதும்-கடுஞ்ஞன சஞ்சர்க்கவாக்கிய மதனால்-துரியமதனையறிதொம்பதமேகசர்-சொல்லுமுற்பூரணசேதனின்னைப் பரநனவிற் கரமணியெனவருளப்- பரிந்துரைனே பள்ளியெழுந்தருளாயே-என்பதனாற்காண்க.

றிடாவிடம் பரசுழுத்திபெனைத் துணிந்தேன்) அறி யாத இடத்தைப் பரசுழுத்தியாக தரிசித்தேன்-எ-று. (இதன்பதசாரம்) நானேதாறு பகண்டபரிபூரணமாய் சமஸ்தமு முணர்வுற்று எவற்றிற்கும்பொதுவாகவிரு ப்பதென்பார் சான்றென்றும் புருவசஞ்சிதங்கோலிய விஷயேந்திரிய ரூபமா யாகாமிய நீங்கிரேறென்றவா தனையான அஞ்ஞானமுங் கடந்த உணர்வென்பார் சா க்கியமென்றுங் சிதாபாசத்துவம் அத்தமித்த கடந்த சைதன்னியமும் பிரமசைதன்னியமும் ஏகமானதென் பார் இறந்திடமென்றும் பெத்தத்திசையிற் சிற்றுண ர்வு முத்தித்திசையில் பேறறிவுயாகியதென்பார் - நா னிருந்தமையுந் தோன்றிடாவிடமென்றும் இரண்டாம் பாழென்பார் - பரசுழுத்தியென்றுங்கூறினர். ;(இதற் குக்காரணம்) நோக்கிமுன்வினையற நுகர்வுறுவினை ய நோக்குமிந்தியங்களின் போக்கறுத்ததத்தே தாக் கியவாதனை தன்னையுந்தவிர்த்துத்-தமத்தினைக் கடந்து ணர் சாக்கியதாக்கி-சாக்கியசான்றுமத் தமித்து நின் றுளிருந் தற்சுருபமுமுப சமித்துணிலொன்றத்-தூக் கினனே சுருபானந்தச் சுடரோ சுந்தரனேபள்ளியெழு ந்தருளாயே - என்றும் இதமகமறவிரு வினவென்ற ருளி - எழில்பரசுழுத்திகார ணதியற்றதுவாம்-அதீத மதிது வஜஹர்லட்சணைபதறைல் ஆசறுசொல்லுறு பா ழிரண்டாம்பாற்-பொதுவதுபகவதுபோக்கடமன்றிப் போதமுமழுங்குமவ்வியாகிறதயிறுகல்-பதிபடல் சுதா சிவ பராசத்தியருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தரு ளாயே என்பதனுற்காண்க. ௯௯

எ

அ‑கை. மேல் பரதுரியத்தை உரைக்கின்றார்.

கவி. மரித்ததென் றுணர்ந் துரைத்ததும்
மரித்திடந்தனிலே
தெரித்தபோதமேயதுபர
துரியமாய்த்தெளிந்தேன்.

க‑து. ஊன்றிய நனவுட னூற்றது மூன்றும்
தோன்றிடாவிடம் பரதுரியமென் றுரைத்தது

இ‑ள். "மரித்ததென் றுணர்ந் துரைத்ததும்,, இறந்ததென்றறிந்து வசனிக்கப்பட்டதும் "மரித்திடந்தனிலே,, இறந்தவிடமாகிய விடத்திலேயின்று "தெரித்தபோதமே,, அறிவித்த அறிவாகின்றதே "அதுபரதுரியமாய்த் தெளிந்தேன்,, தத்பதமாகிய துரியமென்றறிந்தேன்‑எ‑று. (இதன் தாத்பரியம்) தற்போத இறப்பிலேயின்றவுணர்வு மதன்வாசனையாகிய வாக்குமாயையிரண்டு மிறந்துளவிடமானந்தாதீதமென்பார், மரித்ததென் றுணர்ந்துவாத்தது மரித்திடந்தனிலேயென்றும் ‑ அஃதினிலவைசமுற்று அதுதானென்பது நானதுவென்பது மற்றது தானேதானுவதென்பார் தெரிந்தபோதமேயதுபர துரியமென்றுங்கூறினார். எ௫

அ‑கை. மேல்குருசாக்கிரத்தையுரைக்கின்றார்.

கவி. இறையெனும்பொருட்டுரியமே
என்னையாண்டவனே
மறையினந்தத்பதப்பொரு
ளனவெனமகிழ்ந்தேன்.

க‑து. மூப்பதமுடிவினில் மூலகாரணமதாம்,
நற்பொருளனவென நாடியுரைத்தது.

இ‑ள். "இறையெனும்பொருட்டுரியமே,, யாதுக்கேலென்று சொல்லும் பொருளாகிய பிரமமே எ

னையாண்டவனை அடியேனை, அடிமை காண்டாண்ட ருளும்பொருட்டு திருமேனிகொண்டெழுந்தருளுங்கு ருநாத மறையினந்தற்பதப் பொருளையென மதித் தேன் வேதமுடிவாகிய சத்தத்பார்த்தமே குருசாக்ஷி ரமாக நிச்சயித்தறிந்தேன்-எ-று. குருவே பிரமம்பிர மமே குருவென்பார் இறையெனும் பொருட்டுரியமே யென்னையாண்டவனையென்றுகூறினா. 'உதாரணம்; அருவமுமுருவமுமாகியபொருளே அதிதமென்றருளி ய வழித்தது வறிந்த-பொருளுணர்வதுப்ரம் விசிட்ட வாக்கியவதால்-பொருவில்சிற்சொலிதைதற்பதப்பொ ருளதுவாம் இருநிலனெனமுத லருளியபரிசே-எழில் குபூரணத் தியல்குருநனவில்-பரமாவென்றெழுபவம றுத்தருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே எ ன்பதனுற்காண்க. கஅ

ஆ கை. மேல்குருஸ்வபாத்தையுரைக்கின்றார்.

கவி. பண்டைவிச்சுவவாதனைப்
பழுதுபோய்முழுதும்
கண்டகண்ணாடிதாயாய்வக்
கனவதுங்கண்டேன்.

க - ஞ். தாமுயிர்யாவையுந் தானாய்நிறைபரம்
பிரகாசங்குரு கனவென்றுரைத்தது.

இ-ள். "பண்டை" பூருவந்தோற்றுகின்ற விச்சுவ ம் உலகாதிகளினது "வாதனை" துன்பமாகின்ற பழு துபோய் குற்றநீங்கி 'முழுதும்' அசேஷமும் கண்ட ஆடியைப்போலறிவுற்று நின்ற கண்ணாடியாய இட மேயாகின்ற 'கனவதுங்கண்டேன்' குருஸ்வரூபத்தை

யுந் தரிசித்தேன்-எ-று. காரணோபாதிகமுன்று விளங்காநின்ற தத்வரூபமே விஸ்வக்கிராசம் பண்ணியதென்பார் பண்டைவிச்சவாதனைப் பழுதேபோயென்றும் காரிய காரணவுபாதி அசேஷமும் அறிகின்ற அறிவு ஆடியிற் காட்சிபோலென்பார் - முழுதுங்கண்டகண்ணேதயாபவக் கனவென்றுங்கூறினார் உதாரணம் மலமூன்றுருபக்கனவின்மருவு மாசறுமாணவசாத்திகமதனால் உலகேமா யிருந்தன்மாத்திரமா உணர்ந்ததுவே பிரசாபத்திய மென்றருளி - நிலவியபரமதாயவைமுழுதும் நிகழ்ந்ததின்றெற்கென நெடுயவர்முதலே பலவுலகுண்டது மிதுவெனவருளப்பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே என்பதனாற் கா ௯௯
ண்க.

௮௯. மேல்குருசுழுப்தியை உரைக்கின்றார்.

கலி. காட்சியாவையுங்கண்ணதா
வக்கணுங்கரைந்து
மாட்சியாகியவோசர
முறக்கமாய்மதித்தேன்,

௧-து. கட்டமிலாதறி மண்ணிறு மொன்றும்
சட்டிலாவதுவே சுழுப்தியென்றுரைத்தது.

இ-ள். கண்ணதா பார்வைக்குரியதாக காட்சி யாவையும் கண்டறிகின்றதாகிய அசேஷமும் அக்கணுங் கரைந்து அந்தப்பாவையுங் கரைவுற்று மாட்சியாகியவோசரம் மனவாக்குகளாலறியவொண்ணுதபெருமையை உறக்கமாய்மதித்தேன் ஆதியந்த சூனியமாக தரிசித்தேன்-எ-று. தேவதத்தனைநோக்கி அவனெவனும் அக்காலமிக்காலம் நோக்கிக்கண்டேனென்பார்

அனைத்துமாயனைத்து மிலதாயிருக்கின்றதன்னைத்தன் னிடத்துத் தானேயிருந்துவிளக்கி அரிய தவப்பயனாற் பெறும்பேறு தாமாய் நிறைந்ததென்பார்; அருந்தி லாவென்றும் கருதிமுடிவுமறிதற்கரிய முப்பாழுங்க டந்த சூனியமென்பார் மறைக்கந்தமா மகோசாந்தி லென்றும் = துரியசம்பூரணமெனவுணர்ந்த ஸ்வாநுபூதி யை விழியாலறிவித்ததென்பார் நீயிருந்தவாறறிவித் தவா றென்னனமிசைக்கே னென்றுங்கூறினர். இவை யனைத்துஞ் சற்குருவருளாலுணர்க. ௭௧

கவி. எம்பிரானிடந்தொறு
மிடந்தொறுமதுவதுவாய்
தம்பிரானடஞ்செயுமவகை
சாற்றுமாறறியேன்.

க-து. எவ்விடம்பார்க்கினு மவ்விடமதுவாய்ச்
செவ்வியோனின்றது செப்பரிதென்றது.

இ-ள். 'தம்பிரான், எப்பொருட்குமேலாகிய கடவுளே 'எம்பிரான், எமதிறைவனே 'இடந்தொறுமிடந்தொறும, எவ்வெவ்விடங்களை நோக்கினும் 'அதுவதுவாய், அவ்வவ்விடங்களுக்குத்தகுந்த அருவதுவாய் 'நடஞ்செயும்வகை, தேவரீர்நடக்கின்ற கூறுபாட்டினை 'சாற்றுமாறறியேன் உரைப்பதற்கு வகையறிகின்றிலேன் எ-று தனதுடல் பொருளாவி மூன்றையுங் கையேற்றடிமைகொண் டிரட்சிக்குந்தேசிகோத்தமனே யென்பார், எம்பிரானென்றும் = ஜீவசாக்ராதி குருதுரியாந்தமென்பார், இடந்தொறு மிடந்தொறுமென்றும், நனவாதி துரியாந்தங்களில் அதற்கதற்குரிய வியல்பாய் நின்றவென்பார் அதுவதுவா

யென்றும் பிரமாதிஸ்தம்பாந்தந் தானாய் விளங்குவ தை யுரைப்பது வாக்மான சகோசாரமென்பார் கட ஞ்செயும் வகைசாற்று மாற்றியேனென்றுங் கூறினார்

அ வை, மேல்கடனது விண்ணப்பம் அருளிச் செய்கின்றார்.

கலி. ஆவியேயடியேன்செய்கை
மாறாளவெனினும்
பாவியேனதுதானுமுன்
னுடையதாம்பண்டே.

௧ - து. அடிமை கைமாறினுக் காவியேபோ டெல்லாம்
உடையநீயெனக் கொன்றுண்டோ வென்றது

இ - ள். ஆவியே உயிருக்குயிராய் நின்ற ஐயனே அடியேன் செய்கை மாறாள வெனினும் அடிமை செய்யவேண்டிய கைமாறுண்டாயிருக்கின்ற தென்று னும் பாவியேன் வேறாகப் பாவிக்கின்றிலேன் அதுதா னுமுன்னுடைய தாம்பண்டே யான்பாவிக்கின்ற அப் பொருள்களும் முன்பே அத்தேவரீருக்குரிய பொரு ளாம்-எ று. சாரம்-ஆசாரியர்பிறவாநெறியை அநுக்கி ரகஞ்செய்ததற்குசீஷன்குருதக்ஷிணைசெய்வதியல்பெ ன்றார்அடியேன்செய்கைமாறாளவெனினுமென்றும் உ டல்பொருளாவிமூன்றும்அடிமைகொண்டவன்றேகை க்கொண்டபின்பு தனக்கோர்சுதந்தரமின்றென்பார்பா வியேனதுதானு முன்னுடைய தாம்பண்டே யென்று ௱௩
கூறினார்.

கலி. ஆவல்செய்தனதாக்கை
யுள்ளளவுநின்னடியார்க்
கேவல்செய்பவதேயன்றி
மற்றொன்றுமாறறியேன்.

அ - கை, மேல்மாணாக்கன் ஆராமையை அருளி
ச்செய்கின்றார்

கவி. என்றுபலகால்விழுமெழுந்தொரு
மழும்புரிவதென்னையினியான்
றின்றுபலவாகவுரைசெய்யுமவ
னன்பினொடுநெஞ்சுருகியே.

க - ரு. அன்பினாலுருகுமெய்யானந்தமேலிடத்
தன்பின்மத்தர்போற்றொழுதனனென்றது

இ - ள். (அவனவன்பினொடுநெஞ்சுருகி) அந்தச்ச
சிவர்ணன் அன்பினோடும் அனலைக்கண்டநவநீதம்போ
லமனதிளகி (பலகால்விழுமெழுந்தொழும்) அனேகந்தி
ரமாகவணங்கிவிழுவான் எழுந்துநிற்பான் திரும்பவும்
வந்தனஞ்செய்வான் (யானினிப்புரிவதென்னையென்ற
ழும்) அடியேனினிச்செய்யத்தக்கவையென்னையிருக்கி
ன்றதென்று கண்ணீரோடும்படி அழுதுபுலம்புவான்
நின்றுபலவாகவுரைசெய்யும் அஞ்சலிஅத்தனாகநின்று
கொண்டு அனேகவிதமாகத் தோத்திரஞ் செய்வான்
ாக
எ - று.

அ - கை. மேல் குருகடாக்ஷவல்லபம் புகழ்ந்த
ருளிச் செய்கின்றார்.

கவி. எட்டிலறிவின்றியிறைதன்னிலறி
வின்றியிவ்வுடம்பினுடனே
விட்டினுறைவானையினிவீடுபெறு
மென்பதுவிலம்புகிலனே.

ச - ரு. பிறவாநெறிபெருமைசெய்சிடன்
இறவாப்பெருமையையியம்பொணாதென்றது

இ - ள். (எட்டிலறிவின்றி) சாஸ்திரவாசனையுமற்று
(இறைதன்னிலறிவின்றி) ஈஸ்வரவாசனையுமற்று (இவ்

வுடம்பினுடனே) இந்தப்பஞ்சபூதகாரியமாகியதேகத்தோடுதானே[ வீட்டினுறைவான்றனை நிரதிசயானந்த மோக்ஷவீட்டில் இரண்டறக்கலந்திருக்குஞ் சசிவர்ண னை (இனிவீடுபெறுமென்பது) தேகாந்தத்தில்மோக்ஷத்தைப்பெறுவா னென்பதை(விளம்புகிலன்) அளவுபடுத்திச்சொல்லமாட்டேன்-எ-று. ௱எ

அ-கை, சசிவர்ணன் பிதுர்க்களடைந்த நற்கதியைக் கூறுகின்றார்,

கலி. வஞ்சவலியானரகின்வாழ்பிதிர்கள்
பாழ்படுவதாகவருளின்
விஞ்சைவலியாலடையவேறினர்
சுராதிபர்கண்மேனுலகமே.

க-து, நரகம்விட்டுவன் முன்னோர்நரகவாழ் வுற்றனை
பிரமஞானத்திற்பெருமையாலென்றது.

இ-ள். (வஞ்சவலியா னரகின்வாழ் பிதிர்கள்)கொடுமையினது வலிமையினால் நரகத்தில்வீழ்ந்து கிடந்தவிவன்குலத்துப் பிதிர்களனைவரும் (அருளின் விஞ்சைவலியால் பாழ்படுவதாக) அருள்விளங்கிய பரஞானத்தி னது வலிமையினால் நரகம் பாழடைவதாகும்படி (அடையவேறினர்) சுராதிபர்கள்மேனுலகமே) எல்லவருந்தேவர்கட்குரிய சுவர்க்கலோகத்திருந்துவாழ்கின்றனர் எ-று. ௱அ

அ-கை மேல் சசிவர்ணன் பெருமையை அருளிச்செய்கின்றார்.

கலி தேவருமனித்தருமிவன்றொழில்வியந்
துரைசெயத்தகுவதோ
மூவரும்விளம்பமுடியாதிவன்
சேவல்செயமுந்துறுவரே.

க - து. பொருந்திவன்குரு பணிபுகழ்ந்து தேவர்களை ரர்திருத்துமூர்களுரைசெயவரிதென்றது.

இ - ள். (இவன்றொழிலில் வியந்து மூவரும் விளம்ப முடியாது) சசிவர்ணன் குருபணிவிடைத் தொழிலின தருமையை அதிசயித்து மும்மூர்த்திகளாலுஞ் சொல்லமுடியாது தேவருமனித்தருமுரைசெயத் தகுவதோ தேவர்களாலுமனிதர்களாலும்வியந்து சொல்லமுடியுமா இவனதேவல் ; செயமுந்துறுவரோ சசிவர்ணனுக்கு பணிவிடை தாங்கள் செய்வதற்குஎனக்குமுந்தவெனக்குமுந்தவென்று வந்துபொருந்துவார்கள் எ-று. ௯௩

அ கை, மேல் ஞானவானது பெருமையை அருளிச்செய்கின்றார்,

௯௪. ஞானியைநான்சுரனெனுமொழிக
ஞாலமுயநாதனருளால்
மேனியதுகொண்டுதனைநல்கவரு
மென்றறையுட்வேதமுடிவே.

க - து. நான்சுரன்ஞானிரவினென்பதுநன்றல
பிரமமேஞானியம் பேதமென்றெனபது.

இ - ள். (ஞானியைநான் சுரனெனுமொழிக) பரஞானிகளை மனிதனென்றுந்தேவனென்றுஞ்சொல்லுகின்ற சொற்களைநீக்குக-அஃதேதெனில்ஞாலமுயநாதனருளால் உலகங்கடைத்தேறும்பொருட்டு (பரமேசுரனது காருண்யத்தினாலே) மேனியதுகொண்டுதனைநல்கவருமென்று (மானிடவுருவமாகத் திருமேனிகொண்டு தம்மைக்கொடுத்தருளவருமென்று வேதமுடிவறையும்வேதாந்தங்களெல்லாமவசனிக்கும் எ - று. (இதற்குதா

